ஃ2/5

# 108 உபநிஷத்துக்களின் சுருக்கம்

தொகுதி - 3

## மஹாநாராயண உபநிஷத்

அ.வெ. சுகவனேச்வரன்



அருணகம்
19 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை - 600 017

92/5

# 108 உபநிஷத்துக்களின் சுருக்கம்
## தொகுதி : 3

## 19. மஹா நாராயண உபநிஷத்

கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. தைத்திரீய பிராம்மணத்தின் முடிவில் தைத்திரீய ஆரண்யகம் இருக்கிறது. இது பத்து பாகங்களைக் கொண்டது. இதன் கடைசியான, பத்தாவது பாகம் மஹாநாராயண உபநிஷத் எனப்படும் கிருஷ்ண யஜுர் வேதத்திற்குப் பாஷ்யம் (உரை) எழுதிய ஸாயனாசாரியரும், பட்ட பாஸ்கரரும் இதை யாக்ஞிகீ உபநிஷத் என்று குறிப்பிடுகிறார்கள்.

இதில் நாராயண ஸூக்தம் உள்ளது; அதேபோல, துர்க்கா ஸூக்தமும், வழக்கில் உள்ள 'ஸத்யோ ஜாதம்' 'தாயம்பகம் யஜாமஹே' முதலிய சிவ மந்திரங்களும், பல தெய்வங்களின் காயத்ரியும் இன்னும் பல மந்திரங்களும் உள்ளன. ஆகையால், மஹா நாராயண உபநிஷத் என்ற பெயரின் பொருத்தம் விளங்கவில்லை.

ஆனால், தினசரி செய்ய வேண்டிய காரியங்களுக்கும் சடங்குகளுக்கும் கூறவேண்டிய பல மந்திரங்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. உதாரணமாக குளிக்கும் பொழுது சொல்ல வேண்டிய அகமர்ஷன ஸூக்தம். உணவுக்காக, வரிசையில் அமர்ந்து, உண்டிகளை இலையில் படைக்கும் பொழுது சொல்ல வேண்டிய திரிஷுபர்ணம், உணவை உண்ணத் தொடங்கும் பொழுது சொல்ல வேண்டிய ப்ராணாஹுதி மந்திரங்கள் முதலானதும், தினசரி வழிபாட்டிற்கான வைச்வதேவம், பல ஸுக்தங்கள் முதலானவற்றையும் இதில் காண்கிறோம். இவை யக்ஞம் எனப்படுவதால் யாக்ஞிகீ உபநிஷத் என்ற பெயர் பொருத்தமேயாகும்.

மற்ற பெரும்பாலான உபநிஷத்துக்களில் ஓரிரண்டு விஷயங்கள் தொடர்ச்சியாக விளக்கப்படுகின்றன. ஆனால் இதில் எந்த விஷயமும் தொடர்ச்சியாக விளக்கப்படவில்லை. பல

சமயங்களில் ஓத வேண்டிய பற்பல மந்திரங்களின் தொகையாக இது அமைந்துள்ளது. இதில் உள்ள சில மந்திரங்கள் முன்பே வேதங்களில் கூறப்பட்டவை; ஆனால் பெரும்பாலானவைகளை இங்குதான் முதன் முறையாகக் காண்கிறோம். கர்மம், உபாஸனை, ஞானம் முதலிய விஷயங்களைப் பற்றி வேதத்தில் ஸம்ஹிதா பாகத்திலும், பிராம்மணத்திலும் சேர்க்காமல் விட்டுப்போன பல மந்திரங்கள் இங்கு காணப்படுவதால், இதை 'ப்ரகீர்ணம்' (சிதறியவை) என்று ஸாயணர் கூறுகிறார். இதைக் 'கிலம்' என்றும் பின்பு சேர்க்கப்பட்ட தொகுதி என்றும் கூறுகிறார்கள்.

நடுவிலுள்ள மிகப் பெரும்பாலான மந்திரங்கள் சடங்குகளுக்கும் வழிபாட்டிற்கும் உபயோகமாக உள்ளது; எனினும் ஆரம்பத்தில் உள்ள பரமாத்ம பிரகரணம் பரம்பொருளைப் பற்றியும் ரிதம், ஸத்தியம் என்பவைகளைப் பற்றியும் பேசுகிறது; முடிவில் ஞான சாதனம் எனும் பகுதியில் ஸந்தியாசி மோக்ஷத்தை அடையும் வழியைக் கூறுகிறது. ஆக ஆரம்பமும், முடிவும் இதை மற்ற உபநிஷத்துகளுடன் ஒன்றுபடுத்துகிறது.

இந்த நூல், சில பாடங்களில் 64 அனுவாகங்கள் கொண்டதாகவும், சிலவற்றில் 80 அனுவாகங்கள் கொண்டதாகவும், இன்னும் சிலவற்றில் 90 அனுவாகங்கள் கொண்டதாகவும் உள்ளது. தமிழ்நாட்டில் 80 அனுவாகங்கள் கொண்ட பாடமே வழக்கில் இருப்பதால், அதுவே இங்கு கொடுக்கப்பட்டுள்ளது. பின்வரும் பாராக்களின் முடிவில், உபநிஷத் அனுவாகங்களின் எண் குறிக்கப்பட்டுள்ளது.

1. **பரமாத்ம நிரூபணம்** : இவ்வுலகிலுள்ள எல்லாம் எதனிடம் ஒன்றாகக்கூடி, வாழவும், ஒடுங்கவும் செய்கின்றனவோ, எதனிடம் எல்லாத் தேவர்களும், தத்தம் அதிகாரங்களுடன், உறைகின்றார்களோ, எது உயர்ந்தனவோ, பெரியதோ, வெளிப்படையாகத் தோன்றாததோ, அதுவே ரிதம், அதுவே ஸத்தியம், அதையே தீர்க்கதரிசிகள் பரம்பிரம்மம் எனக் கூறுகிறார்கள். அதுவே

அக்கினி, அதுவே வாயு, அதுவே சூரியனும், சந்திரனும், நக்ஷத்திரங்களும், நிமிஷங்களும், முஹூர்த்தங்களும், இரவு பகலும், மாதங்களும், வருஷங்களும் அதனிடமிருந்தே உண்டாயின. அதை எட்டிப் பிடிக்கவோ, அளவு படுத்திக் கூறவோ எவராலும் இயலாது. கண்ணால் எவரும் அதைக் கண்டதில்லை. ஒருமைப்பட்ட மனத்துடன், இதயத்தில் அதைத் தியானிப்பவர், அதை அறிந்து, சாகா நிலையை எய்துகின்றனர்.

2. **தெய்வங்களின் காயத்ரி** : காயத்ரி என்பது ஒரு சந்தஸ் (பண்)ஸின் பெயர். இந்தச் சந்தஸில் வேதங்களில் பல மந்திரங்கள் உள்ளன. 24 எழுத்துக்களைக் கொண்ட இது மூன்று பாதங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது. வேதத்தில் உள்ள இந்தச் சந்தஸில் அமைக்கப்பட்ட எல்லா மந்திரங்களிலும், ரிக் வேதம் III 62.10ல் உள்ள மந்திரம் மிகப் பிரசித்தி பெற்ற 'ஓம் பூர்புவஸ்ஸுவ; தத்ஸவிது; வரேண்யம் பர்க; தேவஸ்ய தீமஹி தீய: ய: ந: ப்ரசோதயாத்' எனும் இது காயத்ரி மந்திரம் என்ற பெயராலேயே குறிப்பிடப்பட்டு ஸந்தியா வந்தனத்தின் முக்கியப் பகுதியாக விளங்குகிறது. இதற்கு விசுவாமித்திரர் ரிஷியாகவும் ஸவிதா தேவதையாகவும் உள்ளனர். உதயத்திற்கு முன்னரும், நடுப் பகலிலும், அஸ்தமிக்கு முன்னரும், விசேஷ சக்தியுடன் விளங்கும் சூரியன் ஸவிதா எனப்படுகிறான். இந்த காயத்ரியைப் பின்பற்றி, அதே அமைப்பில் மற்றும் சில தேவதைகளுக்குக் காயத்ரி மந்திரத்தை இந்த உபநிஷத் கூறுகிறது. அவைகள் முதல் காயத்ரியைப் போன்ற புகழை அடையாவிட்டாலும், அந்தந்த தெய்வங்களின் வழிபாட்டில் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இலக்கண ரீதியாக நோக்குமிடத்து இந்த மந்திரங்களின் அமைப்பு விதிகளுக்கு உட்பட்டதாக இல்லை என்பது உண்மை; ஆனாலும், வேதத்தின் பகுதியாதலால் அவைகளுக்குத் தனி மஹத்துவம் உண்டு; அவைகளைத் திருத்தவும் முடியாது. இந்த உபநிஷத் கூறும் காயத்ரிகளைக் கவனிப்போம்.

I. புருஷஸ்ய வித்மஹே ஸஹஸ்ராக்ஷஸ்ய மஹாதேவஸ்ய தீமஹி।
தந்நோ ருத்ர: ப்ரசோதயாத்॥ (1.5.2)

பொருள் : ஆயிரம் கண் படைத்த பரம புருஷனின் பெருமையை அறிவோமாக. அந்த மஹாதேவருடைய பெருமையைச் சிந்திப்போமாக. துன்பத்தைத் துடைக்கும் ருத்திரரே நம்மை அதில் தூண்டட்டும்.

II. தத்புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி।
தந்நோ ருத்ர: ப்ரசோதயாத்॥ (1.5.3)

பொருள்: அந்தப் பிரசித்தி பெற்ற புருஷனை அறிவோமாக. மகாதேவனைத் தியானிப்போமாக. ருத்திரனே இதில் நம்மைத் தூண்டட்டும்.

III. தத்புருஷாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி।
தந்நோ தந்தி: ப்ரசோதயாத்॥ (1.5.4)

பொருள்: அந்தப் புருஷனை அறிவோமாக. வளைந்த தும்பிக்கை படைத்த வக்ர துண்ட கணபதியைத் தியானிப்போமாக. தந்தம் படைத்த அவரே இதில் நம்மைத் தூண்டட்டும்.

IV. தத்புருஷாய வித்மஹே சக்ரதுண்டாய தீமஹி।
தந்நோ நந்தி: ப்ரசோதயாத்॥ (1.5.5)

பொருள்: அந்தப் புருஷனை அறிவோமாக. சக்கர நாசி படைத்த சக்கர துண்டனான நந்தி கேசுவரனைத் தியானிப் போமாக. நந்திகேசுவரனே இதில் நம்மைத் தூண்டட்டும்.

சிவனுடைய வாகனமான நந்தியைப் பற்றிய காயத்ரி இது. ரிஷபம் (எருது) வடிவில் இருக்கும் அவர், மாயா சக்தியால், மனித உருவம் (தத்புருஷ:) எடுக்க இயலும். ஒரு சமயம் சிவன் அசுரர் களுடன் போரிட்ட பொழுது, நந்தி சக்கராயுதத்தை வாயில் கவ்விப் போரில் சிவனுக்கு உதவினார். ஆகையால், அவர் சக்ர துண்டர் எனப்படுகிறார்.

V. தத்புருஷாய வித்மஹே மஹாஸேனாய தீமஹி।
தந்ந ஷண்முக: ப்ரசோதயாத்॥ (1.6.1)

பொருள்: அந்தப் புருஷனை அறிவோமாக. மஹாஸேனராகிய அவரைத் தியானிப்போமாக. ஷண்முகராகிய அவரே நம்மை இதில் தூண்டப்படும்.

இது முருகப் பெருமானின் காயத்ரி. தேவர்களின் படைத் தலைவனாக அவர் அசுரர்களுடன் போரிட்டதால் அவர் மஹாசேனர். ஆறுமுகத்தோனாகையால், அவர் ஷண்முகர்.

VI. தத்புருஷாய வித்மஹே ஸுவர்ண பக்ஷாய தீமஹி।
தந்நோ கருட: ப்ரசோதயாத்॥ (1.6.2)

பொருள் : அந்தப் புருஷரை அறிவோமாக. பொன் போன்ற சிறகுகளைப் படைத்த ஸுவர்ணபக்ஷரைத் தியானிப்போமாக. அந்தக் கருடனே நம்மை இதில் தூண்டட்டும்.

கருடன் விஷ்ணுவின் வாகனம் 'க்ரு' என்ற ஸம்ஸ்கிருத வினைச் சொல்லிலிருந்து, பாம்புகளை விழுங்குவதால் கருடன் என்ற பெயர் வந்தது. (ஸர்பாணாம் கிரஹனாத் கருட:)

VII. வேதாத்மனாய வித்மஹே ஹிரண்யகர்பாய தீமஹி।
தந்நோ ப்ரம்ஹ: ப்ரசோதயாத்॥ (1.6.3)

பொருள் : வேத மூர்த்தியை அறிவோமாக. ஹிரண்ய கர்ப்பரைத் தியானிப்போமாக. விஷ்ணுவாகிய அவரே நம்மை இதில் தூண்டட்டும்.

VIII. நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி।
தத்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்॥ (1.6.4)

பொருள் : நாராயணரை அறிவோமாக. வாஸுதேவரைத் தியானிப்போமாக. விஷ்ணுவாகிய அவரே நம்மை இதில் தூண்டட்டும்.

எங்கும் வியாபித்திருப்பதால் விஷ்ணு (விசதாதோர் ப்ரவேசனாத்) அன்னைத்துள்ளும் அந்தர்யாமியாக இருப்பதால் வாஸுதேவன். நந: எனப்படும் ஆத்மாவிடமிருந்து உண்டானவை எல்லாம் 'நாராணி' எனப்படுவன. அவைகட்கு இருப்பிடம் 'அயனம்' ஆக இருப்பதால் நாராயணன். உண்டானதற்கெல்லாம்

உறைவிடம் எனப் பொருள் கொள்ளலாம். இந்த உபநிஷத்தில் பின்னர் வரும் நாராயண ஸூக்தத்தில் நாராயணன் என்பதற்கு விளக்கம் கூறப்படுகிறது.

**IX. வஜ்ரநகாய வித்மஹே தீக்ஷ்ண தம்ஷ்ட்ராய தீமஹி।**
**தந்நோ நாரஸிம்ஹ: ப்ரசோதயாத்॥** (1.6.4)

பொருள் : வைர நகங்கள் படைத்தவரை அறிவோமாக. கூரிய பற்களை உடையவரைத் தியானிப்போமாக. நரஸிம்ஹராகிய அவரே நம்மை இதில் தூண்டட்டும்.

நரசிம்ஹனுக்குச் சிங்கம் போன்ற நகங்களும் பற்களும் உள்ளதை இது குறிப்பிடுகிறது.

**X. பாஸ்கராய வித்மஹே மஹத்யுதிகராய தீமஹி।**
**தந்நோ ஆதித்ய: ப்ரசோதயாத்॥** (1.7.1)

பொருள் : பாஸ்கரரை அறிவோமாக. மஹத்தான ஒளியை வீசும் அவரைத் தியானிப்போமாக. ஆதித்யனாகிய அவரே நம்மை இதில் தூண்டட்டும்.

இது சூரியனின் காயத்ரி. பாஸ்கரன் என்றால் ஒளியைக் கொடுப்பவர் எனப் பொருள். அதிதி தேவியின் மகனானதால், சூரியன் ஆதித்யன் எனப்படுகிறான்.

**XI. வைச்வாநாரய வித்மஹே லாலீலாய தீமஹி।**
**தந்நோ அக்னி: ப்ரசோதயாத்॥** (1.7.2)

பொருள் : வைச்வாநரரை அறிவோமாக. கொழுந்து விட்டெரியும் அவரைத் தியானிப்போமாக. அக்னியாகிய அவரே நம்மை இதில் தூண்டட்டும்.

இது அக்கினி காயத்ரி, வைச்வாநர: என்றால், உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் நல்லதை செய்கிறவன் (விச்வேப்ய: நரேப்ய: ஹிந:) என்று பொருள். சமைப்பதற்கும், யாகங்களுக்கும் அவன் தேவைப்படுவதால் வைச்வாநரன் கொழுந்து விட்டு எரியும் தீ ஆஹுதிகளை மேலே தள்ளுவதால், வேள்வித் தீ. லாலீவா எனப்படுகிறது. என்கிறார் ஒரு உரையாசிரியர். இத்துடன் ‘யதா

வேஸாயதே ஷ்யர்சி:' எனும் முண்டக உபநிஷத் வரியை ஒப்பிடலாம். (மு.2 I..2.2)

**XII. காத்யாயனாய வித்மஹே கன்யகுமரி தீமஹி।**
**தந்நோ துர்கி: ப்ரசோதயாத்॥** (1.7.3)

**பொருள்:** காத்யாயனியை அறிவோமாக. கன்யா குமரியைத் தியானிப்போமாக. துர்க்கா தேவியாகிய அவளே நம்மை இதில் தூண்டட்டும்.

இது துர்க்கா காயத்ரி. கத்யர் என்ற மஹரிஷிக்கு மகளாகத் துர்க்கை ஒரு அவதாரத்தில் பிறந்தாள். ஆகையால் காத்யாயன்யை என்ற பெண்பாலின் திரிபு காத்யாயனாய என்று இங்கு காணப் படுகிறது.

கன்யாகுமரி என்றால் ஒளி வீசும் மணமாகாத பெண் எனப் பொருள்படும். பிரகாசித்தல் எனப் பொருள்படும். 'கன்' எனும் சம்ஸ்கிருத வினைச் சொல்லிலிருந்து கன்யா என்ற பெயர்ச் சொல் உருவாகிறது. குமாரி என்றால் தீங்கை அழிப்பவள் என்று விளக்கப்படுகிறது. (கும் குத்ஸிதம் அநிஷ்டம் காரயதி இதி. துர்கி என்பது துர்க்காவின் திரிபு.

இவை தவிர, இன்னும் பல காயத்ரிகளை ஆகம நூல்களும், தந்திர நூல்களும், மற்ற நூல்களும் கூறுகின்றன. காயத்ரி இல்லாமல் ஒரு தேவதையின் வழிபாடு முழுமையை அடையாது என்ற கருத்துதான் இம்மாதிரியான காயத்ரிகளைப் புனைவதின் நோக்கம். மேலே கூறிய காயத்ரிகளிலும், மற்ற காயத்ரிகளிலும், முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, மந்திரம் 'நம்மை' எனும் பன்மைச் சொல்லை உபயோகப்படுத்துவதாகும். ஒருவரே இந்த காயத்ரிகளை ஜபித்தாலும், ஹோமத்தில் உபயோகித்தாலும், அவர் தனக்கு மட்டுமல்லாமல் எல்லோருக்கும் தெய்வத்தை அருள்புரிய வேண்டுகிறார். இது லோகா: ஸமஸ்நா: ஸுகினோ பவந்து (எல்லா உலக மக்களும் இன்புற்றிருக்கட்டும்) 'வஸுதைவ குடும்பகம்' (உலகமெல்லாம் ஒரே குடும்பம்) 'யாதும் ஊரே, யாவரும் கேளீர்'

(எல்லா இடங்களும் நம்முடைய சொந்த ஊர்; எல்லா மக்களும் நம் உறவினர் - புறநானூறு) இவைகளை ஒக்கும் அடிப்படையில், நமது மதமும் சமூகமும் எல்லா மக்களின் நலனையும் கோருகிறது என்பதற்கு இவை சான்று.

3. தூர்வா ஸூக்தம் : 'தூர்வா' என்றால் அருகம்புல். சித்த வைத்தியத்தில் இதில் மிகச் சிறந்த உடல் ஆரோக்கியச் சாதனப் பொருள் இருப்பதாகக் கூறப்படுகிறது. உடலிலிருந்து நச்சுப் பொருள்களை இதன் சத்து வெளியேற்றும். அருகம்புல்லுடன் சுத்தமான மண்ணையும் தலையில் வைத்துக்கொண்டு, மந்திரம் 1.7.4ஐ ஜபித்துக் குளிப்பது வழக்கம்.

ஆயிரக்கணக்கான புண்ணியப் பொருட்களில் சிறந்ததும், நூற்றுக்கணக்கான வேர்களையும் முளைகளையும் உடையதும் ஆக அருகம்புல் உள்ளது. அதில் உறையும் தூர்வா தேவி கெட்ட கனவுகளை நாசம் செய்கிறாள். அவள் என்னுடைய பாவங்களனைத்தையும் போக்கட்டும். கிளைக்குக் கிளை, கணுவுக்குக் கணு வளர்ச்சி பெறும் அருகம்புல்லே! எங்களையும் அவ்வாறே பலவாறாக வளரச் செய்வாயாக! (1.7.4)

நூற்றுக்கணக்காக அரும்பெடுப்பவளும், ஆயிரக்கணக்காக வளர்பவளும், இஷ்ட தேவதையுமான உன்னை நாங்கள் ஹவிஸைக் கொண்டு வழிபடுவோமாக. (1.8.1)

4. மிருத்திகாஸூக்தம் : குதிரைக் குளம்பாலும் தேர்ச் சக்கரத்தாலும் அடையாளம் செய்யப்பட்டவளே! வாமனாவதாரத்தில் விஷ்ணுவால் அளக்கப்பட்டவளே! பூமிதேவியே உன்னை என் தலையில் வைத்துக் கொள்கிறேன். அடிதோறும் என்னைக் காத்தருள்வாயாக. (1.8.2)

5. சத்ரு ஜப மந்திரங்கள் : புகழ்மிக்க இந்திரன் எங்களுக்கு நன்மையைச் செய்யட்டும். அனைத்தையும் அறியும் பூஷா நமக்கு நன்மையைச் செய்யட்டும். தடைபடாத தேரையுடைய கருடர் நமக்கு நன்மையைச் செய்யட்டும். பிருஹஸ்பதி நமக்கு

நன்மையைச் செய்யட்டும். (1.9.4) இது ரிக் வேதம் I. 89.6ல் காணப்படுகிறது. தார்க்ஷ்ய: என்றால் கருடன்.

அவன் ஆதியில் பிரமத்திடம் முதன்மையாகத் தோன்றினான்; ஒளிமிக்க அவன் உலகின் எல்லை வரை பிரகாசிப்பவன்; இப்படிப்பட்ட வேனன் எனும் சூரியன், எங்கும் நிறைந்த, வானுலகையும் பிரகாசிப்பிக்கிறான். தன்னைப் போன்ற உருவங்களை அவன் எங்கும் புகுத்துகிறான். காணும் உலகும் காணப் படாதவைகளும் தோன்றுமிடமாக அவனே விளங்குகிறான். (1.10.1)

இந்த மந்திரம் தைத்திரீய ஸம்ஹிதை IV. 2.8.2லும் அதர்வ வேதம் IV. 1.1லும் இந்த மந்திரம் அடிக்கடி உபயோகத்தில் உள்ளது. 'பிரகாசிப்பது' எனப் பொருள்படும் 'வி' எனும் வினைச் சொல்லிலிருந்து 'வேன' என்ற சொல் வந்துள்ளது. நடுப்பகல் சூரியனை இது குறிக்கிறது.

அவள் நறுமணத்தின் மூலம் இன்பமூட்டக் கூடியவள்; அவள் எவராலும் வெல்ல முடியாதவள், புஷ்டியை அளிப்பவள், எல்லாம் நிறைந்தவள், எல்லா உயிர்களுக்கும் ஈசுவரி; அந்த மஹாலக்ஷ்மியை இங்கே எழுந்தருள வேண்டுகிறேன். (1.10.3)

'கந்தத்வாராம்' என்று தொடங்கும் இந்த மந்திரம் ரிக் வேதகிலத்தில் ஸ்ரீஸூக்தத்தில் காணப்படுகிறது. இன்றும் வழக்கமாக வீடுகளில் புரியும் எல்லாத் தெய்வங்களின் பூஜைகளிலும், தெய்வத்தின் படத்திற்கோ, மற்ற உருவத்திற்கோ, அபிஷேகத்திற்குப்பின் சந்தனம் அணிவிக்கும் பொழுது, இந்த மந்திரத்தை ஓதுகிறார்கள்.

ஜலதேவதைகளே! நீங்கள் உயர்ந்த நன்மைகளைப் புரிகிறீர்கள் என்பது பிரசித்தம். அப்படிப்பட்ட நீங்கள் மகிமை பொருந்தியதும் ரமணீயமானதுமான ஞானக் கண்ணின் பொருட்டு உணவை அணியுங்கள். உங்களிடம் மிகவும் மங்களமான பேரின்பரஸம் உள்ளது; அதை, இங்கேயே எங்களுக்கு அன்பு சுரக்கும் அன்னையைப் போலப் பகிர்ந்து கொடுங்கள். நீங்கள்

ஞானத்தால் எங்களைப் புனிதமாக்கி, உலகில் இன்புற்றிருக்க அருளுங்கள். (1.11.6; 1.12.1)

இந்த மந்திரங்களை, நாம் ரிக் வேதத்தில் X 9.1-3யான மூன்று ரிக்குகளாகக் காண்கிறோம். தைத்திரீய ஸம்ஹிதை IV 1.5லும் இவை உள்ளன. தினமும் அந்தணர்கள் புரிய வேண்டிய ஸந்தியாவந்தன மந்திரங்களில் இவை ஒரு பகுதியாகும். இங்கு ரஸம் என்பது பிரம்மானந்தத்தைக் குறிப்பிடுகிறது. 'உசதீரிவ மாதா:' அன்பு சுரக்கும் அன்னையைப் போல என்பது அழகான பொருத்தமான உவமை. சடங்குகளிலும் இந்த மந்திரங்களை ஓதி ப்ரோக்ஷண ஸ்நானம் என்று நீரை மேலே தெளிக்கிறார்கள். தண்ணீரைத் தெய்வமாகப் போற்றும் இந்த நம் மரபு, ஜலக்கஷ்டத்தால் துயருறும் இக்காலத்தில், மிகப் பொருத்தமாகவே தோன்றுகிறது.

6. அகமர்ஷண ஸூக்தம் : இது 18 மந்திரங்கள் கொண்டது. அந்தணர்கள் இந்த மந்திரங்களை ஓதிக் கொண்டே குளிக்க வேண்டும். வருணபகவானையும், இந்திரனையும், ஜலதேவதைகளையும் புகழ்ந்து வணங்கும் இம்மந்திரங்கள் ஜபிப்பவனைப் பாவங்களிலிருந்து விடுதலையளிக்கக் கோருகின்றன. இவைகளில் சில ரிக் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டன. இந்த உபநிஷத்தில் 1.13.5; 1.14.1; 1.14.2 ஆக உள்ள மூன்று மந்திரங்களும் ரிக் வேதத்தில் X 190. 1-3 ஆகக் காண்கிறோம். இவை உலகப் படைப்பைச் சுருக்கமாகக் குறிப்பதாகப் பொருள் படுகின்றன. ஒரு மனிதன் குளிக்கும் பொழுது, உலகப் படைப்பிற்கான இந்த ரிக்குகளை ஏன் ஓதவேண்டும் என்று புரியவில்லை. இந்த மந்திரங்கள் ஆத்மசுத்திக்காக ஓதப்படுகின்றன என்று தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனால் உலகப் படைப்பிற்கும் ஆத்ம சுத்திக்கும் உள்ள தொடர்பு எங்ஙனம் என்பது தெரியவில்லை.

7. துர்க்காஸூக்தம் : அக்னி வடிவில் விளங்கும் சக்திக்கு ஸோமரசத்தைப் பிழிந்து தருவோம். அனைத்தையும் அறியும்

அந்தச் சக்தி நமது எதிரிகளை எரிக்கட்டும்! அது நமது எல்லா ஆபத்துக்களையும் போக்கட்டும்! கப்பலால் கடலைக் கடப்பது போல, அந்த அக்கினி சக்தி நம்மைப் பாவக் கடலிலிருந்து அக்கரை சேர்க்கட்டும்! (2.1)

இந்தத் துர்க்கா ஸூக்தம் ரிக் வேதத்திலிருந்தும் மற்ற நூல்களிலிருந்தும் சில மந்திரங்களைத் தொகுத்துக் கொடுக்கிறது. இந்த மந்திரம் ரிக் வேதம் I 99.1 ஆக உள்ளது. இதில் ஜாதவேதஸ் என்பது உண்டாகிய எல்லாவற்றையும் அறியும் அக்கினியைக் குறிக்கிறது. நம்மை மேல் நிலைக்கு அழைத்துச் செல்வதால் அது அக்னி எனப்படுகிறது. (அக்ரம் நயதி) இங்கு எதிரிகள் என்பது வெளியில் இருக்கும் எதிரிகளை மட்டுமல்லாது, நமக்குள்ளேயே இருக்கும் காமம், குரோதம் முதலிய எதிரிகளையும் குறிப்பிடுகிறது.

துர்க்காதேவி கொழுந்து விட்டெரியும் தீயின் நிறத்தை ஒத்தவள், தனது ஒளியால் தீங்கை எரிப்பவள்; அவளை ஞானக்கண்ணால்தான் அறிய முடியும்; அவள் மக்களுக்கு அவரவர்களுடைய கரும பலனைக் கூட்டி வைப்பவள்; அந்தத் தேவியை நான் சரணமடைகிறேன். பிறவிக் கடலை எளிதில் கடத்துவிப்பவளே! உனக்கு நமஸ்காரம். (2.2)

இங்கு துர்க்கா என்பது 'துக்கேன கந்தும சக்யா' என்று பிரிக்கப்படுகிறது. சொல்லுக்குச் சொல் சரியாகப் பொருள் கூறின், இதை 'அடைய முடியாதவள்' என்று பொருள். ஆனால் இங்கு இதற்கு, 'பக்தர்களின் இடையூறுகளைத் தவிர்ப்பவள் என்று உரையாசிரியர்கள் விளக்குகிறார்கள்.

அக்னி சக்தியே! புகழத்தக்கநீ, நல்ல வழிகளால், எங்களை எல்லாத் துன்பங்களிலிருந்தும் கரையேற்றுவிக்க வேண்டும் எங்களுக்கு இருப்பிடமும், நிறையப் பயிர் விளையும் பூமியும் கொடுத்தருள வேண்டும். என்னுடைய மகன்களுக்கும், அவர்களுடைய மகன்களுக்கும் நன்மை புரிய வேண்டும். (2.3)

இது ரிக் வேதத்தில் I 189.2 ஆக உள்ளது.

ஆபத்தைப் போக்கும் அக்கினி சக்தியே! கப்பலால் கடலைக் கடப்பது போல, எல்லாப் பாவங்களின்றும் எங்களைக் கடக்கச் செய்வாய். அக்கினி சக்தியே! அத்ரி மஹரிஷியைப் போல, அனைவரும் இன்புறுமாறு மனதார அருள்புரிந்து கொண்டும், எங்கள் உடலை காப்பாற்றிக் கொண்டும் இருக்க வேண்டும். (2.4)

இதை ரிக் வேதம் V 4.9ல் காணலாம். இங்கு ' அத்ரிவத்' என்று ஒரு குறிப்பிட்ட மஹரிஷியைச் சொல்வது கவனிக்கத்தக்கது. ஸாயனர் விளக்குகிறார். "உயர்ந்த பிரம்ம ஞானத்தை அடைந்த ஒரு மஹரிஷி இருந்தார். மூன்று விதமான துக்கங்களிலிருந்தும் விடுபட்டவராதலால் அவர் அத்ரி என்ற பெயருடன் விளங்கினார். படைக்கப்பட்ட எல்லாப் பிராணிகளிடத்தும் இரக்கம் காட்டுவது ஜபதபங்களில் அவர் எல்லாப் பிராணிகளின் ஷேமத்தையும், சாந்தியையும் எப்பொழுதும் வேண்டிக் கொண்டே இருந்ததை மக்கள் கவனித்தார்கள். தயைக்கு ஒரு எடுத்துக்காட்டாக அவர் விளங்கினார்.

எதிரிகளின் சேனையை வெல்லுவதும் அடக்குவதும் உக்கிரமானதுமான அக்கினி சக்தியைப் பரமபதத்திலிருந்து அழைக்கிறோம். அந்தச் சக்தி எல்லா ஆபத்துக்களையும் போக்கட்டும். அக்கினி பகவான் நமது பாவங்களைப் போக்கிப் பிழைகளை மன்னித்துக் காப்பாற்றட்டும். (2.5)

இங்கே அக்கினியை மிக்க உயர்ந்த இடத்திலிருந்து அழைக்கிறார்கள். ரிக் வேதத்தின் முதல் ரிக்கின் முதற் சொல்லே அக்கினி அல்லவா? (அக்னிமீளே புரோஹிதம்... I 1.1)

அக்கினியே! வேள்விகளில் புகழப்படும் நீ இன்பத்தை வளர்க்கிறாய். கரும பலனை அளிப்பதும், ஹோமத்தைச் செய்வதும், துதிகள் செய்யப்படுவதும் நீயே ஆகிறாய். அக்னி சக்தியே! உனது உடலையும் ஹவிஸால் இன்புறச் செய்து, எங்களுக்கும் எல்லா ஸௌபாக்கியங்களையும் அருள்வாயாக. (2.6)

இதை ரிக் வேதம் **VIII** 11.10ல் ஒரு மாற்றத்துடன் காணலாம்.

இந்திரனிடம் விளங்கும் சக்தியே! பாவத் தொடர்பின்றி, புண்ணியமான பொருள்களுடன் கூடி, அமிர்தத்தால் அபிஷேகம் செய்யப்பட்டு, எங்கும் பரவி நிற்கும் உன்னை வணங்குகிறோம். சுவர்க்கத்தின் உச்சியில் வசிக்கும் தேவர்கள், விஷ்ணு பக்தனான என்னை, இவ்வுலகிலிருக்கும் பொழுதே பேரின்பத்திற்குத் தகுதியுள்ளவனாக ஆக்க வேண்டும். (2.7)

துர்க்கா ஸூக்தத்தில் விஷ்ணுவைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. எல்லாத் தெய்வங்களும் ஒன்றே என்ற நமது மதத்தின் ஐக்கிய நோக்கை இது காட்டுகிறது.

**8. தவத்தின் பெருமை :** உண்மை பேசுதல் தவம்; உண்மை யாக நடத்தல் தவம்; கேள்வி தவம்; அமைதி தவம்; புலனடக்கம் தவம்; மனவடக்கம் தவம்; ஈகை தவம்; வேள்வி செய்தல் தவம்; பூ: புவ: ஸுவ: என்பது பிரம்மம்; அதைத் தியானம் செய்வது மேலான தவம்.

**9. பாவ புண்ணியம் :** நன்றாகப் பூத்த ஒரு மரத்தின் நறுமணம் காற்றினால் வெகு தூரத்திற்குக் கொண்டு செல்லப் படுகிறது. இது போலவே, புண்ணியச் செயல்களின் மணம், காலத்தையும் தேசத்தையும் கடந்து, வெகு தூரத்திற்கு, சுவர்க்கம் வரை கொண்டு செல்லப்படும். ஆனால் பாவச் செயலின் பயம் எப்படி? ஒரு பெரிய பள்ளத்தின் வெகு அருகில் ஒரு வாள் பொருத்தப்பட்டிருக்கிறது. அதன் கூரிய பாகம் மேல் நோக்கி இருக்கிறது. வீம்பு கொண்டு நான் அதன்மேல் நடப்பேன் என்று பிடிவாதம் செய்கிறேன்; ஒவ்வொரு அடி வைக்கும்போதும், அது காலை வெட்டும், அல்லது நான் பள்ளத்தில் விழுந்து விடுவேன் என்று நடுங்குகிறேன்; அங்ஙனம் நான் பாவத்தைக் கண்டு நடுங்க வேண்டும். அழியாத உதவியை விரும்பும் ஒருவன், இவ்வாறு எண்ணி பாவச் செயலிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். (11)

முதல் உவமைக்கு ஒத்ததாக புத்தர் தம்ம பதத்தில் கூறுகிறார். “சந்தனமானாலும், மல்லிகைப் பூவானாலும், அதன் நறுமணம்

வீசும் காற்றை எதிர் நோக்கிச் செல்ல முடியாது: ஆனால் ஒரு நல்ல மனிதனின் நறுமணம் வீசும் காற்றுக்கு எதிராகவும் செல்லுகிறது. நன்னடத்தை உள்ளவர்கள், தங்கள் நல்வாசனையால் எல்லா இடங்களிலும் பரவுகிறார்கள். உயர்வான வாழ்க்கையை வாழ்பவர்கள் கடவுளின் உயர்ந்த இடத்தை அடைகிறார்கள்.''

10. தஹர வித்தை: அணுவுக்கும் அணுவாகவும் பெரிதுக்கும் பெரிதாயும் உள்ள ஆத்மா இந்த ஜீவனின் உள்ளத்தில் உறைகிறது. செயலைக் கடந்த அந்த ஆத்மாவை, ஒருவன், அந்தக் கரணங் களின் தெளிவால் காண்கிறான். அப்பொழுது, துயரங்களிலிருந்து விடுபட்டவனாய், அவன் இறைவனுடைய அருளால், ஆத்மாவின் பெருமையை உணர்கிறான். (12.1.1)

'அணோரணீயான்' எனத் தொடங்கும் இந்த மந்திரம் சிறு மாறுதலுடன் கடோபநிஷத்திலும் (II 20) இதே மாதிரியாக சுவேதாசு வதர உபநிஷத்திலும் (IV 20) காண்கிறோம். முந்திய பிரிவுகளின்படி நடந்த ஒருவனுக்குச் சித்த சுத்தி ஏற்பட்ட பிறகு, இந்தப் பிரிவு அவனுக்குப் பரம்பொருளை விளக்கி ஞானத்தை அளிக்கிறது.

அதனிடமிருந்தே எல்லாக் கடல்களும், மலைகளும் பெருகும் ஆறுகளும், எல்லாச் செடி, கொடி, மரங்களும் உண்டாகின்றன: இந்த ரசத்துடன் கூடிய அந்தராத்மா எல்லாப் பிராணிகளின் உள்ளிலும் உறைகிறது. (12.1.3)

சுத்தமான ஆகாயத்தில் சூரியனாகவும், இடைவெளியில் காற்றாகவும், வேள்வி மேடையில் அக்கினியாகவும், வீட்டில் அதிதியாகவும், (ஜீவசைதன்யமாக) மனிதர்களிடையும் சிறப்பாக தேவர்களிடையும், நேர்மையான நடத்தையாகவும், வானில் வாழ்வதாகவும், நீரிலும் சூரியக் கிரணங்களிலும் உண்டாவதாக வும், உலகத்தின் அழகிலும், ஒழுங்கிலும் தோன்றுவதாயும், மலையில் உதய சூரியனாகப் பிறப்பதாயும் பேருண்மை ஒன்றே உளது. (12.2.1)

ஹம்ஸ மந்திரம் என்று பெயர் பெற்ற இதை முதலில் ரிக் வேதம் IV. 40.5ல் காண்கிறோம். இதில் ஞானத்தால் தெளிவடைந்த

மஹரிஷி தான் கண்ட பரம் பொருளை வருணிக்கிறார். இதே மந்திரத்தைப் பிறகு வாஜசனேயி ஸம்ஹிதை X 24; XII. 14லும், தைத்திரேய ஸம்ஹிதை III. 2.10.1; IV. 2.1லும், கடோபநிஷத் V. 2லும் காணலாம்.

இந்தப் பேருண்மை என்பது பரம் பொருளைக் குறிக்கிறது என்று எல்லா உரையாசிரியர்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள்.

ஹம்ஸ; என்பது சாமானியப் பேச்சில் அன்னப் பறவையைக் குறிக்கும். ஆனால் ஆன்மிக உலகில் அது ஆத்மாவைக் குறிக்கும்; இங்கு ஆத்மா எனப்படுவது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஆகும்.

ஸாயனர், தன்னுடைய ரிக்வேத உரையில், இந்தப் பேருண்மையான பரப்பிரம்மம் உறையும் இடங்களுக்கு இந்த ரிக்கில் கூறியபடி நீண்ட பட்டியல் போடுகிறார்.

1. ஹம்ஸ : ஹந் என்ற சம்ஸ்கிருத வினைச் சொல்லிலிருந்து உருவாகிறது; 'அழிப்பது' என்ற பொருள் இருந்தாலும் இங்கு 'எப்பொழுதும் போய்க் கொண்டிருப்பது' (ஸர்வதா கச்சதி) என்று பொருள்படும்; இது சூரியனை குறிக்கிறது. அல்லது இச்சொல்லைத் திருப்பிப் போட்டுப் பிரித்தால் ஸ + அஹம் (அவனே நான்) என்றாகும்; அதாவது நானே பரப்பிரம்மம்.

2. வஸு : எப்பொழுதும் இருப்பது, அதாவது, காற்று.

3. ஹோதா : வேள்வி புரியும் யஜமானன்; இது வேள்வித் தீயைக் குறிக்கும்.

4. அதிதி : விருந்தாளி எனப் பொருள்; இது சமையல் அடுப்புத் தீயைக் குறிக்கும்.

5. ந்ரு ஸத் : இது மனிதர்களின் உள்ளுறையும் சைதன்யம், அதாவது, விழிப்புணர்ச்சியைக் குறிக்கும்; அல்லது மனிதனின் கண்களைக் குறிக்கும்.

6. வரஸத் : இது சூரிய மண்டலத்திலுள்ள புருஷனைக் குறிக்கும்.

7. ரித ஸத் : ரிதத்தில், அதாவது உலகின் ஒழுங்கில் உள்ளுறைபவன்.

8. வ்யோமஸத் : ஆகாயத்தில் இருப்பவன், ஸாயனர் இதைக் காற்று என்கிறார்.

9. அப்ஜா : நீரில் உண்டானவன். மஹீதரன். இது மீன் முதலிய நீர் வாழ் ஜந்துக்களைக் குறிக்கிறது என்கிறார். கடலிலிருந்து உதயமாகி, கடலிலிலேயே அஸ்தமிப்பது போலத் தோன்றும் சூரியன் என்றும் சில உரையாசிரியர்கள் கூறுகிறார்கள்.

10. கோஜா : வெளிச்சத்தின் கிரணங்களில் உண்டானவள்.

11. நிரஜா : உண்மையிலிருந்து உண்டானவர் அல்லது வேத மந்திரங்களிலிருந்து தோன்றியவர்.

12. அத்ரிஜா : மலையில் உதயமானவர் மஹீதார். இது கற்கள் உராய்வதால் உண்டாகும் அக்கினியைக் குறிக்கிறது என்கிறார். மேகங்களிலிருந்து உண்டாகும் மழை என்றும் கூறப்படுகிறது. கடைசியாக இதுதான் ரிதம், பேருண்மை, இதுவே பரப்பிரம்மம் என்று முடிக்கிறார் ஸாயனர்.

ஸமுத்திரத்திலிருந்து அலைகளைப்போல, பரமாத்மாவிட மிருந்து பிராணிகளுக்கு இன்பமளிக்கும் உலகம் தோன்றிற்று. அந்தப் பரஞ்சோதியின் ரஹஸ்ய நாமத்தை (ஓம்) மெதுவாக (உதடுகளை மட்டும் அசைந்து) ஜபித்து ஒருவன் சாகா நிலையை எய்துகிறான். ஒளிமிக்க ஞானிகளின் நாவில் இது உறைகிறது. அழியாத ஆனந்தத்திற்கு நடுவில் ஆதாரமாய் விளங்குவது. (12.2.3)

இதை ரிக் வேதம் IV 5.8.1ல் காணலாம். ஓங்காரத்தின் மஹிமையை இது கூறுகிறது. ஓசையின்றி, உதட்டை மட்டும் அசைத்து ஓங்காரத்தை ஜபிக்க வேண்டும்.

நெய்யைத் தாரையாக ஹோமம் செய்வது போல் இந்த ஞான வேள்வியில் நாம் நமஸ்காரத்துடன் இந்த ஓங்காரத்தை ஜபிப்போம். (அகார - உகார - மகார - நாதமாகிய) நான்கு கொம்புகளை






உடையதும், வெண்மையான எருது போன்ற சிறந்ததுமான இந்த ஓங்காரம், ஜபிக்கப்பட்டு, உடனிருப்பவன் காதில் கேட்கும்படி ஒலி வடிவில், பரப்பிரம்மத்தைத் தோற்றுவித்தது. (12.24)

இதை ரிக்வேதம் IV 58ல் காணலாம்.

எருதுக்கு ஒப்பிடப்பட்ட ஓங்காரமாகிய இதற்கு நான்கு கொம்புகள், கரங்கள் மூன்று,, தலைகள் இரண்டு, கைகள் ஏழு. முப்பிரியால் கட்டப்பட்ட இந்த எருது மஹ: எனும் பிரம்ம தத்துவத்தை உரத்துக் கூவி விளக்குகிறது. சுயப் பிரகாசமான தெய்வம் மனிதர்களிடம் புகுந்துறைகிறது. (12.2.5)

'சத்வாரி ச்ருங்கா' எனத் தொடங்கும், அடிக்கடி உபயோகத்திலுள்ள இந்த மந்திரம் ரிக் வேதம் IV 58.3யாக உளது. ஸாயனரின் உரையின்படி பிரணவமாகிய எருதுக்கு அ, உ, ம நாதமாகிய நான்கு கொம்புகள். விழிப்பு, கனவு, உறக்கமாகிய மூன்று நிலைகள். இரண்டு தலைகள் கீதை 7ம் அத்தியாயத்தில் கூறியபடி, பரப்பிரகிருதியும் அபரப் பிரகிருதியும் ஆகும். ஏழு கைகள், ஏழு உலகங்கள், பிரணவமாகிய எருது, பரம்பொருளை உரக்கக் கூறுகிறது.

பட்ட பாஸ்கரரின் உரையின்படி பிரணவம் வேள்வியைக் குறிக்கிறது. வேள்வியில் அமரும் அத்வர்யு முதலிய நான்கு குருமார்களும் நான்கு கொம்புகள். கார்ஹமந்யம் முதலிய மூன்று அக்கினிகளும் மூன்று கரங்கள். வேள்வி புரியும் யஜமானனும் அவன் மனைவியும் இரு தலைகள். காயத்ரி முதலிய ஏழு பண்கள் (சந்தம்) ஏழு கைகள். வேள்வி விருப்பங்களை அளிக்கிறது. ஆகையால் அது எருது. (எருதுக்கு ஸம்ஸ்கிருதச் சொல்லாகிக விருஷபத்தை 'வர்ஷயநி' பொழிகிறது என்ற வினைச் சொல்லிலிருந்து உருவாக்குகிறார்கள்) வேள்வியில் கேட்கும் வேத கோஷம் எருதுவின் உரத்த குரலாகச் சொல்லப்படுகிறது.

பதஞ்சலியின் மஹாபாஷ்யத்தில் இந்த மந்திரம் இலக்கணத்தில் ஒரு கூற்றுக்கு உதாரணமாக உள்ளது.

கர்மத்தாலோ, மக்கட் பேற்றாலோ, செல்வத்தாலோ அடைய முடியாத சாகா நிலையை, ஒரு சிலர் தியாகத்தாலே தான் அடைந்துள்ளார்கள். சுவர்க்கத்திற்கு மேலானதும், அறிவாளிகளின் புத்தியாகிய குகையில் வைக்கப்பட்டுள்ளதுமான இதை, ஞான வாழ்க்கையில் முயல்வோர் அடைகின்றனர். (12.3.4)

'நகர்மணா நப்ரஜயா' எனத் தொடங்கும் இந்த மந்திரத்தி லிருந்து நான்கு மந்திரங்களை சந்நியாசிகளுக்கு வந்தனம் செய்யும் பொழுது ஜபிக்கிறார்கள். ஸாயனர் தியாகம் என்பதற்குக் கருமங்களையெல்லாம் விட்டு விட்டு சந்நியாச வாழ்க்கையை மேற்கொள்வதைக் குறிக்கிறது என்கிறார். பட்ட பாஸ்கரர் தியாகம் என்பது கர்ம பலத்தியாகத்தைக் குறிக்கிறது. அதாவது, ஒருவன் விதித்த கருமங்களைப் புரிந்து கொண்டு, அதன் பலன்களை வேண்டாமலும், விரும்பாமலும் இருப்பதாகும்.

செம்மையான வேதாந்த ஞானத்தால் உறுதியான புத்தி யுடையவர்களாக, சந்நியாச யோகத்தால் தெளிவான அந்தக் கரணமுடன் துறவிகள் விளங்குகிறார்கள். அவர்கள் அழிவற்ற பிரம்மத்தில் நிலை பெற்று ஜீவன் முக்தர்களாக வாழ்கிறார்கள். மரணத்தில், பற்றுகள் அனைத்தினின்றும் விடுபடுகின்றனர் (எங்கும் நிறைந்த பிரம்மத்தில் லயிக்கின்றனர்) (12.3.5)

இதை முண்டகோபநிஷத் III 2.6ல் ஒரு சிறு மாறுதலுடன் காணலாம்.

ஒரு நகரத்தின் நடுவில் உள்ள அரண்மனை போன்ற இதயம் பரம்பொருளின் இருப்பிடம். அது மிகச் சிறியது. மாசற்றது. அதனுள் இன்னும் சிறியதோர் ஆகாசம் (சிற்றம்பலம்) உள்ளது. அது துயரம் அற்ற இடம். அதனுள் உள்ளதைத் தியானத்தால் தேடி அறிய வேண்டும். (12.3.6)

இதைச் சாந்நோக்கிய உபநிஷத் VIII 1.1 உடன் ஒப்பிடலாம் பிரம்ம சூத்திரம் I 3.14-21ல் தஹராகாச உபாசனை இன்னும் விரிவாக விளக்கப்படுகிறது.

ஓங்காரம் வேதத்தின் ஆரம்பத்தில் கூறப்படுகிறது: வேதத்தின் முடிவிலும், அது உபநிஷத்களில் நிலைபெற்றுள்ளது. அந்த ஓங்கார ஒலி பிரகிருதியில் லயமடைகிறது. பின்னர் விராட்டுக்கும், ஹிரண்ய கர்ப்பனுக்கும், மூலப்பிரகிருதிக்கும் அப்பால் (அ-உ-ம வுக்கு அப்பால் நாதமாக) எஞ்சி நிற்பதே மஹேசுவரஸ்வரூபம். (12.3.7)

நீண்டநேரம் பிரணவத்தை உரக்க ஜபித்த பின்னர் உச்சரிப்பு ஓய்ந்த பின்னும், அதன் 'ம்' எனும் 'ஹூங்காரம்' பிரபஞ்சத்தின் நாதமாக, ஒலித்துக் கொண்டே இருக்கிற எஞ்சி நிற்கும் இதுதான் பரம்பொருளின் நாத வடிவம்.

**11. நாராயண ஸூக்தம்:** கணக்கற்ற தலைகளை உடையவரும், ஒளிமிக்கவரும் எல்லாவற்றையும் பார்க்கிறவரும், உலகிற்கு மங்களம் செய்பவரும், உலகாயிருப்பவரும், அழிவில்லாதவருமான நாராயணன் எனும் தெய்வத்தைத் தியானம் செய்கிறேன். அவருடைய நிலையே அடையத் தக்கது. ஒப்புயர்வில்லாதது. (13.1.1)

விச்வம் - இத்துடன் 'விச்வம் விஷ்ணு' (சஹஸ்ரநாமம்) ஒப்பிடலாம். நிற்பதெல்லாம் நெடுமால்.

இவ்வுலகைக் காட்டிலும் மிக்க மேலானவரும் என்றும் உள்ளவரும், உலகாக விளங்குபவரும், பக்தர்களுடைய பாபத்தையும் தாபத்தையும் போக்குபவரும் ஆகிய நாராயணனைத் தியானம் செய்கிறேன். இந்த உலகப் பரம புருஷனேயாம். அவர் உள்ளுறைவதாலேயே உலகம் உயிருள்ளதாக ஆயிற்று. (13.1.2)

ஹரி என்றால் பாவத்தையும், அறியாமையையும் அகற்றுபவர். பாபாஞ்ஞானயோர்: ஹர்த்தாரம்) பச்சை நிறம் என்ற வேறு ஒரு பொருளும் 'ஹரி' என்ற சொல்லுக்குண்டு. (பச்சை மா மலைபோல் மேனி.. திவ்யப் பிரபந்தம்)

உலகிற்கு நாயகரும், ஜீவர்களுக்கு ஈசுவரரும், என்றும் உள்ளவரும், மங்கள வடிவினரும், மாறாதவரும், சிறப்பாக அறியத்

தக்கவரும், எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பவரும், சிறந்த புகலிடமாயிருப்பவருமான நாராயணனைத் தியானம் செய்கின்றேன். (13.1.3)

இங்குள்ள 'மங்கள வடிவினரும்' எனும் பொருள் கொண்ட 'சிவம்' எனும் சொல் குறிப்பிடத்தக்கது. விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் சிவ எனும் சொல் இரண்டு இடங்களில் வருகிறது. 27வது பெயராகவும், (ஸர்வ: சர்வ: சிவ: ஸ்தாணு - 4) 600வது பெயராகவும் (அநிவர்த்தி நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமகிருந் சிவ 64) காணப்படுகிறது. இரண்டிற்கும் சற்று வெவ்வேறான விளக்கங்களை சங்கரர் உறையில் கொடுத்துள்ளார். 27வது பெயருக்கு, 'ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களும் அற்றவராதலால் பரிசுத்தர். (நிஸ்த்ரை குண்யதயா சுத்தத்வாத் சிவ) என்னும், 600வது பெயருக்குத் 'தன்னுடைய பெயரை நினைத்த மாத்திரத்தில் பாவங்களைப் போக்குகிறவர்' (நாமஸ்மிருதி மாத்ரேண பாவயண் சிவ) என்றும் சங்கரர் விளக்குகிறார். சிவனேயாகிய நாராயணனைத் தியானம் செய்கிறேன் என்றும் பொருள் கொள்ளலாம்.

மாறாதவர் எனப் பொருள்வரும் 'அச்யுதம்' என்பது விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் மூன்று இடங்களில் வருகிறது. 100வது பெயராக வருவதை அஜஃஸர்வேச்வர: ஸித்த: ஸித்தி: ஸர்வாதிரச்யுத 11 தன் பதவியிலிருந்து வழுவாதவர். பக்தர்கள் உள்ளத்திலிருந்த நழுவாதவர். (ஸ்வரூப ஸாமர்த்யாத் ச்யுதே, நச்யவதே, நச்யவிஷ்யதே) என்று விளக்குகிறார் சங்கரர். 318வது பெயராக (அச்யுத: ப்ரதித: ப்ராண - 35) என்பதை அறு வகையான மாறுதலற்றவர் என விளக்குகிறார். மூன்றாவதாக அச்யுதம் என்பது 552வது பெயராக ஸங்கர்ஷணோச்யுத: என்று கூட்டுச் சொல்லாக வருகிறது. (வேத: ஸ்வாங்கோபிஜித: கிருஷ்ணோ த்ருட: ஸங்கர்ஷணோச்யுத 59) ஆக வருகிறது. ஊழிக் காலத்தில் மக்களை இழுத்து ஒடுக்குபவரும் தமது வடிவில் மாறுதலின்றியும் இருப்பவர்.

பராயணம் என்பது 565வது பெயராக (ஸத்ந்யாஸ கிருச்சம. சாந்தோ நிஷ்டா: சாந்தி: பராயணம் - 62) உளது. 'மறுபடியும் ஸம்ஸாரத்தில் திரும்பாமலிருக்கும் உயர்ந்த இடமாயிருப்பவர்' (பரம் உத்கிருஷ்டம் அயனம் ஸ்நானம் புனராய்ருத்தி சங்கர - ரஹீதம்) என்று சங்கரர் விளக்குகிறார்.

நாராயணனே சிறந்த ஒளி. அவரே பரமாத்மா அவரே பரம் பொருள் அவரே சிறந்த தத்துவம். (13.1.4)

நாராயணனே தியானம் செய்பவர்களில் சிறந்தவர். அவரே சிறந்த தியானமும் ஆவார். உலகம் முழுவதும் எது எல்லாம் காணப்படுகிறதோ அல்லது கேட்கப்படுகிறதோ அதெல்லாம் நாராயணனே (12.1.5)

அவ்வனைத்தையும் உள்ளும் வெளியும் ஊடுருவிக் கொண்டு நாராயணன் இருக்கிறார். முடிவில்லாதவரும், நாசமில்லாத வரும், எல்லாவற்றையும் அறிந்தவரும், கடலினுள்ளிருப்பவரும், உலகிற்கெல்லாம் நல்லதைச் செய்பவரும் ஆன நாராயணனைத் தியானிக்கிறேன். (13.2.1)

இங்கு அனந்தம் எனும் சொல், விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் 659வது பெயராகவும், 886வது பெயராகவும் இரு இடங்களில் வருகிறது. 'எக்காலத்திலும் அழியாதிருப்பவர், எங்கும் ஊடுருவி இருப்பவர் இடம், காலம், பொருள் மூன்றிலும் அளவுபடாதவர். அல்லது ஆதிசேஷ வடிவம் என்று சங்கரர் விளக்குகிறார். இத்துடன் தைத்ரீய உபநிஷத் வரிகளை ஒப்பிடலாம். 'ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம' (2.1) பாகவதம் கூறுகிறது' யஸ்யாந்தம் நவிது: ஸுராஸுரகனா: தேவாய தன்மை நம: (12.13.1)

இங்கு கவி என்பது விஷ்ணு சஹஸ்ர நாமத்தில் 132வது பெயராக உள்ளது. (வேதோ வேத விதவ்யங்கோ வேதாந்தோ வேதவித் கவி: 14) எல்லாவற்றையும் காண்பவர், எல்லாமறிபவர் (க்ராந்த தர்சீ ஸர்வத்ருக்) என்று சங்கரர் விளக்குகிறார்.

இதயம் கீழ் நோக்கிய தாமரை மொட்டு போல விளங்குகிறது. கழுத்தெலும்பிற்குக் கீழே, தொப்புளுக்கு ஒரு சாண் மேலே, இதயம் உள்ளது. (13.2.2)

இதுதான் சாந்தோந்கிய உபநிஷத் VIII 1.1ல் கூறப்படும் தஹாராகாசம்.

உலகிற்கெல்லாம் சிறந்த உறைவிடம். சுவாலைக் கொழுந்தால் சூழப்பட்டாற்போல் தாமரை மொட்டு போன்ற இதயம், நாற்புரமும், நரம்புகளின் பிடிப்பால் தொங்குகிறது. (13.2.3)

அதனுள்ளே மிகச் சிறிய துவாரம் உளது. அதில் அனைத்தும் நிலை பெற்றுள்ளது. அதனுடைய நடுவில், எங்கும் ஒளி வீசுவதாயும், எல்லாத் திக்கிலும் செல்வதாயும் உள்ள சிறந்த அக்கினி உளது. (13.2.4)

அந்த அக்கினி வடிவான பகவான் முதலில் உண்பவராக வும், உணவை எல்லோருக்கும் பிரித்துக் கொடுத்துக் கொண்டு நிலைத்து நிற்பவராகவும், பழுதுபடாதவராயும், அனைத்தை யும் காண்பவராயும், இருக்கிறார். அவருடைய கிரணங்கள் குறுக்கிலும், மேலும் கீழுமாக, எப்பொழுதும் ஊடுருவி யிருக்கின்றன. (13.2.5)

அது உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை தன்னதாகக் கொண்ட உடலைச் சூடுள்ளதாகச் செய்கிறது. அதன் நடுவில் மெல்லியதான அக்கினிச் சுவாலை மேல் நோக்கி அமைந்தி ருக்கிறது. (13.2.6)

கார்மேகத்தின் நடுவிலிருந்து ஒளிவீசும் மின்னல் கொடி போலும், செந்நெல்லின் ஊகுபோல மெல்லியதாகவும், பொன் நிறமாயும், அணுவைப் போல் ஸூக்ஷ்மமாகவும் அது பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. (13.2.7)

அந்தச் சுவாலையின் நடுவில் பரமாத்மா நிலை பெற்றிருக்கிறார். அவரே பிரம்மா, அவரே சிவன், அவரே

விஷ்ணு. அவரே இந்திரன். அவரே அழிவற்றவரும். தன்னை ஆள்பவர் எவருமில்லாதவருமான பரம புருஷர். (13.2.8)

வேதம் பேசுகிறது

**இந்த்ரம் மித்ரம் வருணம் அக்னிம் ஆஹு**
**அததிவ்ய: ஸ ஸுபர்ணோ கருந்மான்**
**ஏகம் ஸத் பிப்ரா பஹுதா வதந்தி**
**அக்னிம் யமம் மாதரிச்வானம் ஆஹு - (ரிக் வேதம் I 165.46)**

சிவனும் விஷ்ணுவும் மற்ற எல்லாத் தெய்வங்களும் ஒன்றே என்ற கருத்தை அழுத்தம் திருத்தமாக உபநிஷத் கூறி. நாராயண ஸூக்தத்தை முடிக்கிறது.

சிவபூஜை மந்திரங்கள் :

மஹாப்ரளய சாக்ஷியான சிவனுக்கு நமஸ்காரம் யமனுக்கும் யமனாயவருக்கு நமஸ்காரம். தத்துவங்களுக்கெல்லாம் மேலாகிய வருக்கு நமஸ்காரம். ஸதாசிவ தத்துவத்திற்கு நமஸ்காரம். மங்கள வடிவினருக்கு நமஸ்காரம். பொன்னாலான லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். சிறந்த ஒளி வீசுபவருக்கு நமஸ்காரம். நல்ல காந்தி பொருந்திய லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். திவ்ய சுக வடிவினருக்கு நமஸ்காரம். தேவ லோகத்தில் விளங்கும் லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். உலகில் உற்பத்தி வடிவினருக்கு நமஸ்காரம். (16.1)

உலகிலுள்ளவர் பூஜிக்கும் லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். ஊழிக் காலத்தில் உலகை அழிப்பவருக்கு நமஸ்காரம். இன்பமளிக்கும் லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். மங்களஸ்வ ரூபிக்கு நமஸ்காரம். ஒளி வடிவானருக்கு நமஸ்காரம். ஜோதி லிங்க வடிவாகியவருக்கு நமஸ்காரம். பிராணிகளுக்கெல்லாம் உயிரா யிருப்பவருக்கு நமஸ்காரம். எல்லாப் பிராணிகளின் இதயத்தி லும் மறைந்து உறைபவருக்கு நமஸ்காரம். ஒப்புயர்வற்றவருக்கு நமஸ்காரம். ஒப்புயர்வற்ற லிங்க வடிவினருக்கு நமஸ்காரம். எல்லோராலும் பூஜிக்கப்படுவதும். (ஸாம சூரிய வடிவாகியதுமான

லிங்கத்தை இந்த மந்திரங்களால் பிரதிஷ்டை செய்து பூஜிக்கிறார்கள். இது மிகவும் புண்ணியமான மந்திரம். (16.2)

மேலே கூறிய 16.1லும் 16.2லும் சிவனின் 22 பெயர்களைச் சொல்லி, ஒவ்வொன்றுக்கும் நமஸ்காரம் கூறுகிறார்கள். இந்த மந்திரங்களை வீட்டிலோ, கோயிலிலோ, மற்ற இடங்களிலோ சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யும்போது ஓதுகிறார்கள்.

'சர்வ' எனும் பெயர் 'அழிப்பது' எனப் பொருள்படும். 'சர்' என்ற சமஸ்கிருத வினைச் சொல்லிலிருந்து உருவாகி யிருக்கிறது.

மாண்டூக்ய உபநிஷத் சிவன் என்ற சொல்லை விளக்குகிறது. 'அவன் பார்க்க முடியாதவன், விவரிக்க முடியாதவன், புரிந்து கொள்ள முடியாதவன், அடையாளம் எதுவுமில்லாதவன், மனதால் நினைத்துப் பார்க்க முடியாதவன். குறிப்பிட முடியாதவன், ஒன்றை ஆத்மா என்று அறியத்தக்கவன், நீர் முதலிய ஐந்து பூதங்களின் விரிவாகிய இவ்வுலகுமற்றவன் அமைதியானவன் மங்களமான வன்" (அத்ருஷ்டம், அவ்யவஹார்யம், அக்ராஹ்யம், அலக்ஷணம், அசிந்த்யம், அவ்யபதேச்யம், ஏகாத்மப்ரத்யய - ஸாரம், ப்ரபஞ்சோப சமம், சாந்தம், சிவம்" - மா.2.7)

ஸத்யோஜாதரைச் சரண்புகுகிறேன். ஸத்யோ ஜாதருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம். மேன் மேலும், பிறவியில் என்னைப் புகுத்த வேண்டாம். பிறவியைக் கடந்த நிலையில் என்னைச் சேர்த்தருளும் ஸம்ஸாரத்தைத் தோற்றுவிக்கும் உமக்கு நமஸ்காரம். (17)

சிவனுக்கு ஐந்து முகங்கள் உள்ளன. நான்கு திக்குகளையும் நோக்கிய நான்கு முகங்களும், மேலே நோக்கியதாக ஐந்தாவது முகமும் அவை ஆகும். இந்த ஐந்து முகங்களையும் தனித் தனியாகத் தியானம் செய்ய ஐந்து மந்திரங்கள் உள்ளன. அவைகளில் இது முதலாவது. சிவனுடைய மேற்கு முகத்தைத் தியானம் செய்யும் மந்திரம். ஸத்யோ ஜாதம் என்றால் 'இப்பொழுது பிறந்தவன்' என்று பொருள் (ஸத்ய ஏவ ஆவிர்ப்பூதம்) சிவனின்

மேற்கு முகம் வெளி நோக்கும் பொழுது படைப்பும், உள் நோக்கும்பொழுது மோக்ஷமும் கிடைக்கிறது. ஸம்ஸாரத்தைப் படைக்கும் மேற்கு முக்திற்கு ஸத்யோ ஜாதம் எனப் பெயர்.

வாம தேவருக்கு நமஸ்காரம். உலகனைத்திற்கும் முன்ன வராகியவருக்கு நமஸ்காரம். சிறப்புமிக்கவருக்கு நமஸ்காரம். ருத்ரருக்கு நமஸ்காரம். காலரூபிக்கு நமஸ்காரம். பிரகிருதி யிலிருந்து விதவிதமான மாறுதல்களைத் தோற்றுவிப்பவர்க்கு நமஸ்காரம். பல்வேறு வகையில் பலத்தைத் தோற்றுவிப்பவர்க்கு நமஸ்காரம். பலவடிவினருக்கு நமஸ்காரம். பலத்தை ஒடுக்குப வருக்கு நமஸ்காரம். உண்டாகிய அனைத்தையும் அடக்கி ஆள்பவருக்கு நமஸ்காரம். மனோசக்தியைத் தூண்டி விடுபவருக்கு நமஸ்காரம். (18)

இது சிவனுடைய வடக்கு நோக்கிய முகத்தைத் தியானம் செய்யும் மந்திரம்.

எல்லாமாகியவரே! கோரமில்லாத உமது சாந்த, ஸாத்விக வடிவங்களுக்கும், கோரமான ராஜஸ வடிவங்களுக்கும் மிக்க கடுமையான தாமஸ வடிவங்களுக்கும், பிரளய காலத்தில் இம்சிக்கும் உமது எல்லா ருத்ர வடிவங்களுக்கும் எல்லா இடங் களிலும் எல்லாக் காலத்திலும் நமஸ்காரம் இருக்கட்டும். (19)

இந்த மந்திரம் அகோர சிவன் அல்லது தக்ஷிணாமூர்த்தி எனப்படும் சிவனுடைய தெற்கு முகத்தைத் தியானம் செய்வதாகும். பக்தர்களுடைய ஆசைகளை நிறைவேற்றும் பொழுது சிவனுடைய முகம் அகோரம் எனப்படுகிறது. (பக்தா பீஷ்டதானானுகூலதயா சாந்தேப்ய: ஸாத்விகேப்ய:)

பிரசித்தி பெற்ற தத்புருஷரை அறிவோமாக, மஹா தேவரைத் தியானிப்போமாக. ருத்திரரே அதில் நம்மைத் தூண்டட்டும். (20)

இந்த மந்திரத்தை ஏற்கெனவே தெய்வங்களின் காயத்ரி (2.11) என்ற தலைப்பில் பார்த்தோம். இது சிவனின் கிழக்கு நோக்கிய முகத்தைத் தியானம் செய்வதாகும்.

எல்லா வித்தைகளுக்கும் ஈசனும், எல்லா உயிர்களுக்கும் இறைவனும், வேதநாயகனும், பிரம்மாவின் தலைவனும் ஆகிய பிரம்மம் எனக்கு மங்களத்தைச் செய்தருள வேண்டும். அது ஸதாசிவம் (நான் அதுவே ஆகிறேன்) (21)

இது மேல் நோக்கிய சிவனுடைய முகத்திற்குத் தியானம் செய்யும் பொழுது கூறப்படும் மந்திரம். ஸதாசிவோம் எனும் சொல் ஸதாசிவ: + ஓம் என்று பிரிகிறது. பிரணவமே ஸதாசிவம், அதுவே நான். ஸ ஏவ ஸதாசிவ: ஓம் அஹம் பவாமி இதி

ஹிரண்ய பாஹுவிற்கு, ஹிரண்யவர்ணனுக்கு, ஹிரண்ய ரூபருக்கு, ஹிரண்யபதிக்கு, அம்பிகாபதிக்கு உமாபதிக்கு பசுபதிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம். (22)

இங்கு சிவனை ஏழு பெயர்களிட்டு வழிபடுகிறார்கள். அந்தப் பெயர்களில் விளக்கம் வருமாறு:

1. ஹிரண்யபாஹு: கைகளில் பொன்னாலான ஆபரணங் களைப் பூண்டவர் (ஹிரண்யாபரணாலங்க்ருத ஹஸ்தாய)

2. ஹிரண்யவர்ணர் : பொன்போன்ற வேறு வஸ்துக்களின் இருப்பிடம். (வேதம், பொன் போல) உயர்ந்தது என்றும் கற்றுக் கொள்வது சிரமமானதாகையால், கிடைப்பதற்கரிது என்றும் கூறப்படுகிறது.

3. ஹிரண்ய ரூபர்: பொன்போல் ஒளி வீசுபவர். (தேஜோமயாய)

4. ஹிரண்ய பதி: மனதைக் கவரும் பொருட்களுக்கு அதிபதி (ஹிதரமணீயானாம் அர்த்தானாம் ஸ்வாமினே)

5. அம்பிகாபதி: எல்லா உலகங்களுக்கும் தாயான அம்பிகையின் கணவர்.

6. உமாபதி : பிரம்ம வித்தையே உருவெடுத்து வந்தாற் போலுள்ள உமையின் கணவர். (உமாயா: ப்ரஹ்ம வித்யாத்மக சரீராயா: ஸ்வாமினே)

"பராசக்தி, உலகைத் தோற்றுவிக்கும்பொழுது அம்பிகை எனவும், தன்னுள் அடக்கிக் கொள்ளும் பொழுது உமா எனவும் கூறப்படுகிறாள்" பட்ட பாஸ்கரர்.

7. பசுபதி : பிரம்மாவிலிருந்து எல்லாப் பிராணிகளுக்கும் நாயகர்.

காணும் பொருள்களின் அழகாயும் காட்சிக்கு ஆதாரமாயும் உள்ள பரப்பிரம்மத்தை உடல் தோறும் உறைபவரை, கரும் சிகப்பு வண்ணமுள்ளவரை, வீரியத்தின்மேல் நோக்கு உடையவரை, முக்கண்ணனை, எல்லாம் தன் வடிவாகக் கொண்டவனை, மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கிறேன். (23)

ரிதம் ஸத்யம் - மேலான உண்மை (அத்யந்த - ஸத்யம்) இது பரப்பிரம்மத்தைக் குறிக்கிறது. ஸகுணமாகவும் நிர்க்குணமாகவும் உள்ள பரப்பிரம்மம் என்றும் கொள்ளலாம்.

கிருஷ்ண பிங்களம் (கரும்சிகப்பு வண்ணம்) பரப்பிரம்மம் உலகிற்கு அருள் புரிவதற்காக வலதுபுறத்தில் மஹேசுவர பாகத்தில் கடுமையாகவும், இடதுபுறத்தில் உமையின் பாகத்தில் சிவப்பு வர்ணமாகவும் ஆக, உமாமஹேசுவரன் கரும் சிவப்பு வண்ணமுடையதாகக் கூறப்படுகிறார். (ப்ரஹ்ம ஜகதனுக்ரஹாய தக்ஷிணே மஹேச்வரபாகே க்ருஷ்ணவர்ண; வாமே உமாபாகே பிங்கள வர்ணச்சஸந்) இந்த மந்திரத்தைக் கூறிச் சிவனை நமஸ்காரம் செய்ய வேண்டும்.

த்ரி ஸுபர்ணம் : விசேஷ காலங்களில், சடங்குகள் முடிந்த பிறகு அந்தணர்கள் வரிசையாக உணவு அருந்த உட்கார்ந்ததும், உணவு இலைகளில் படைக்கப்படும் பொழுது, வழக்கமாக எல்லோரும் கோஷ்டியாக ஜபிக்கும் மந்திரங்கள் த்ரிஸுபர்ணம் எனப்படும்.

'ஸுபர்ண' என்ற சொல் அழகான சிறகுகளை உடைய என்று பொருள் படுகிறது. புராண நூல்களில் இது கருடனைக் குறிக்கிறது. வேதத்தில் பல இடங்களில் வரும் "த்ரிஸுபர்ணா

ஸயுஜா ஸஹாயா...." (ரி.வே. I 164.20; முண்டக உபநிஷத் III 1.1 சுவேதாச்வதர உபநிஷத் முதலியவை) என்ற மந்திரத்தில் இச்சொல் அழகான சிறகுகள் உள்ள பறவை என்று பொருள்படுகிறது. ஆனால் மற்ற பல இடங்களில் வேத நூல்களில் இந்தச் சொல் சூரியனையும் அக்கினியையும் குறிக்கிறது. தவிர சில இடங்களில் இது பிரணவத்தையும் குறிக்கிறது.

கருடன் விண்ணிலிருந்து அமிருதத்தை மண்ணுக்குக் கொண்டு வந்தாற்போல, வானிலுள்ள சூரியனும், பூமியிலுள்ள வேள்வித் தீயும், நடுவில் உள்ள மின்னலும் ஆகிய பிரம்மமே யான, ஒளிப்பிழம்புகள், ஞானமடைந்த மனிதன் இறந்த பிறகு, அவனுடைய ஆத்மாவை மண்ணிலிருந்து விண்ணுக்கு, அமிருதத்திற்கு, சாகாமைக்கு, அழைத்துச் செல்கின்றன. அதே போலப் பிரணவமும், ஆத்மாவை சாகாமைக்கு அழைத்துச் செல்லுகிறது. ஆகவே, இவைகள் ஸுபர்ண என்று கூறப் படுகின்றன.

'த்ரி' என்ற ஸம்ஸ்கிருதச் சொல்லிற்கு மூன்று என்று பொருள். (ஆங்கிலத்திலும் 'த்ரீ' என்றால் மூன்று என்பது குறிப்பிடத்தக்கது)

மூன்று ஸுபர்ணங்கள் என்பதற்குத் தெளிவான விளக்கம் காணவில்லை. ஸுரியன், வேள்வித்தீ, மின்னல் ஆகிய மூன்று ஒளிப்பிழம்புகளையும் த்ரி என்ற சொல் குறிக்கலாம் அல்லது அ - உ - ம ஆகிய மூன்று எழுத்துக்களாலானப் பிரணவத்தை இது குறிக்கலாம். இனி த்ரிஸுபர்ண மந்திரங்களில் சிலவற்றைப் பார்க்கலாம்.

பிரம்மம் என்னை வந்தடையட்டும், பிரம்மானந்தம் என்னை வந்தடையட்டும், பிரம்மமேயாகிய ஆனந்தம் என்னை வந்தடையட்டும். (38.1)

த்ரிஸுபர்ணம் என்ற இந்த மந்திரத்தை, ஒரு அந்தணனுக்கு அவன் கேட்காமலேயே கற்றுக் கொடுக்கலாம். த்ரிஸுபர்ணத்தை

ஓதுகின்றவர்கள் நிச்சயமாகப் பிரம்ம ஹத்தியாலேற்படும் பாவத்தை அழிக்கிறார்கள். அவர்கள் ஸோமயாகம் செய்த பலனை அடைகிறார்கள். அவர்கள் உணவு உண்ணும் வரிசையிலுள்ள ஆயிரக் கணக்கானவர்களையும் புண்ணியசாலிகளாக்குகிறார்கள். (38.3)

ஸவித்ரு தேவனே! இப்பொழுது நீங்கள் எங்களுக்கு மழலைச் செல்வத்தை அருள வேண்டும். கெட்ட கனவுகளையும் அவற்றின் பயனையும் விலக்கியருள்வீர். எல்லா பாவங்களையும் போக்கி அருளவேண்டும். எது எனக்கு உயர்ந்த நன்மையோ, அதை நீங்களே நிச்சயித்து, அதை எனக்குத் தந்தருள வேண்டும். (39.2)

ஸந்தியாவந்தனத்தின் கடைசி பாகமாக, 'அத்யானோ தேவஸவித' என்று தொடங்கும் இந்த மந்திரம் ரிக் வேதம் V 82 4-5 ஆக உள்ளது.

காற்று இன்பமாக வீசட்டும். ஆறுகள் இனிமையாகப் பெருக்கிக் கொண்டு ஓடட்டும். செடி கொடிகள் இனிமையை அளிப்பவையாக இருக்கட்டும். இரவும் காலையும் இனிமையாக இருக்கட்டும். பூமியின் புழுதிகூட இன்பத்தை அளிக்கட்டும். நமது தந்தை போன்ற ஆகாயம் இன்பத்தை அளிக்கட்டும். காட்டிலுள்ள மரங்கள் இன்பம் நிறைந்தவைகளாக இருக்கட்டும். சூரியன் இன்பம் அளிக்கட்டும். பசுக்கள் இனிமையான பாலைக் கொடுக்கட்டும். (39.3)

இது ரிக் வேதத்தில் I 90, 6-8 ஆகக் காணப்படுகிறது.

**சாவைத் தடுக்கும் மந்திரங்கள்:**

இயற்கையாக நறுமணம் உடையவரும், கருணையால் பக்தர்களைப் போஷித்து வளர்ப்பவரும் ஆகிய முக்கண்ணனை வழிபடுகிறோம். வெள்ளரிப் பழம் காம்பிலிருந்து விடுபடுவது போலச் சாவின் பிடிப்பிலிருந்து உமதருளால், விடுபடுவோமாக. மோக்ஷ மார்க்கத்திலிருந்து விலகாமலிருப்போமாக. (56)

“த்ரயம்பகம் யஜாமஹே....” என்று தொடங்கும் பிரசித்தி பெற்ற மிருத்யுஞ்ஜய மந்திரம் எனும் இது வாஜசனேயி ஸம்ஹிதையில் III 6 ஆகக் காணப்படுகிறது. ஸ்ரீருத்ரம் என்று வழக்கமாக ஜபிக்கப்படுவதில் இதைக் கடைசியில் சேர்த்துக் கொள்கிறார்கள். முழுமந்திரமும் கீழே கொடுக்கப்படுள்ளதை

திரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்தனம் உர்வாருகமிவ பந்த்னான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத். (56)

விஷ்ணுவாகிய ருத்திரனுக்கு நமஸ்காரம் என்னைச் சாவிலிருந்து காத்தருளும் (75)

மந்திரம் பின்வருமாறு உள்ளது.

**நமோருத்ராய விஷ்ணுவே ம்ருத்யுர்மே பாஹி ।**

விஷ்ணுவும் சிவனும் ஒன்றே என்பதை இது நிலை நாட்டுகிறது. மந்திரத்தில் வினைச் சொல்லிலும் ஒருமை இருப்பது. இரண்டு தெய்வங்களும் ஒன்றே என்பதை மேலும் உறுதிப் படுத்துகிறது. இத்துடன் ஸ்கந்தோப நிஷத்தில் உள்ள பின்வரும் வரியை ஒப்பிடலாம்.

யதா சிவமயோ விஷ்ணு: ஏவம் விஷ்ணுமய: சிவ: ।

மேலே கூறிய இரண்டு மந்திரங்களையும் (56, 75) சாவைத் தடுக்கும் மந்திரங்களைத் தினமும் ஜபிக்கலாம்.

ஞானஸாதனம்: நிச்சய புத்தியுடையவர்கள் ஸந்நியாசமே சிறந்தது என்றும், அதுவே பிரம்மம் என்றும், பிரம்மம் அனைத்தை யும் ஆனந்தமாயும், தானே தோன்றுவதாயும், மக்களைக் காப்பதாயும், கால வடிவாயும் உள்ளது என்றும் கூறுகிறார்கள். (79.13)



அநுராகம் சிறப்பு வெளியீடுகள்

## வேதம் / உபநிடதம்

| | |
|---|---|
| ஈஸாவாஸ்ய உபநிஷதம் | 10.00 |
| உபநிடத வேதாந்தங்கள் | 10.00 |
| வழிகாட்டும் வேதங்கள் | 10.00 |
| ரிக் வேதம் | 10.00 |
| சாம வேதம் | 10.00 |
| யஜுர் வேதம் | 10.00 |
| அதர்வண வேதம் | 10.00 |
| ரிக் வேத உபநிடதம் | 10.00 |
| சுக்ல யஜுர் வேத உபநிடதம் | 15.00 |
| கிருஷ்ண யஜுர் வேத உபநிடதம் | 15.0υ |
| சாம வேத உபநிடதம் | 15.00 |
| அதர்வண வேத உபநிடதம் | 15.00 |
| கடோபநிஷத்து - 1 (ப்ரதமாவல்லி) (மூலமும் விளக்கமும் ஆராய்ச்சியும்) | 10.00 |
| கடோபநிஷத்து - 2 (த்விதீயாவல்லி) (மூலமும் விளக்கமும் ஆராய்ச்சியும்) | 10.00 |
| கடோபநிஷத்து - 3 (த்ருதீயாவல்லி) (மூலமும் விளக்கமும் ஆராய்ச்சியும்) | 10.00 |
| வேத நீதிகள் | 10.00 |
| கடோபநிஷத் | 10.00 |
| கேனோபநிஷத் | 10.00 |
| பிரச்னோபநிஷத் | 10.00 |
| மாண்டூக்ய உபநிஷத் | 10.00 |
| முண்டக உபநிஷத் | 10.00 |
| ஐதரேய உபநிஷத் | 10.00 |
| தைத்திரீய உபநிஷத் | 10.00 |

